ரூ. 5.00

# மக்கள் சிந்தனை

தமிழ் ஆண்டு 2040
தை - சனவரி 2009

## தமிழ்ப் புத்தாண்டு பொங்கல் நல்வாழ்த்துக்கள்



வத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| தமிழ் ஆண்டு 2040 | மாதம் : தை |
| மலர் : 24 | இதழ் : 1 |




## தைத்திங்களே வருக! தமிழ்ப் புத்தாண்டாய் மலர்க!

தைத்திங்கள் முதல் திருநாள் தமிழ்ப் புத்தாண்டாய் மலர்ந்துள்ளது. தமிழர் வாழ்வு இயற்கையோடு இயைந்த வாழ்வு;

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐவகை நிலங்கள்.

1. இளவேனில், 2. முதுவேனில், 3. கார், 4. கூதிர், 5. முன்பனி, 6. பின்பனி

என ஆறுவகைப் பருவங்கள் பகுத்துப் பிரித்து காலத்தைத் துல்லியமாய்க் கணக்கிட்டவன் தமிழன்!

நீர்க்கடிகை, நிழற்கடிகை, மணற்கடிகை என இவைகள் மூலம் மின் அணுச்சாதனங்களின் கடிகைகளுக்கு இணையாக, துல்லியமாகக் காலத்தை கணித்த அறிவியல் பார்வை தமிழனின் பார்வை!

மண்ணைக் கோயிலாய்க் கொண்டிருக்கின்றனர். உழவர்க்கு சூரியன்தான் காலக்கடிகை. கடலே தம்தாய் வீடாய்க் கொண்டிருக்கும் பரதவர்க்கு நிலவுதான் காலக்கடிகை! காலத்தைக் கணித்த அருமையே தமிழனின் பெருமை!

ஒரு நாள் ஆறுபொழுதுகளாய் அமைகின்றது!
எப்படி?

வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு, மாலை, யாமம் என ஆறுவகைப் பொழுதுகள்! ஆறு சிறுபொழுதுகளையும் கூட்ட அறுபது நாழிகைகள் வரும்!

ஒரு நாழிகைக்குத் தற்பொழுதைய நேரப்படி 24 நிமிடங்கள்!

60 நாழிகைகள், இன்றைய கால நேரப்படி 1440 நிமிடங்கள்!

இன்றைய கால அளவையாகிய ஒரு நாளுக்குரிய 24 மணி நேரத்தோடு, துல்லியமாய்ப் பொருந்திப் போகின்றன!

என்னே! தமிழனின் கணிக்கும் ஆற்றல்!

மேலை நாடுகள் உருப்பெருக்கி வழியே விண்மீன்களைத் தேடிக் கொண்டிருந்தபொழுது காலத்தைத் துல்லியமாய்க் கணிக்கும் பெரும் கணியன்கள், வானசாத்திர வல்லுநர்கள் தமிழ் மன்னர்களின் அரசவையில் நிரம்பி வழிந்தார்கள்!

கணியன் கருத்தைப் பொய்ப்பிக்க மணிமகுடம் மறுதலித்துத் தன் வாழ்வைத் துறந்து, தமிழையே தன் வாழ்வாக்கிக் கொண்ட தமிழ்த்துறவி "இளங்கோ அடிகளைத்" தமிழ்த்தாய் தன் மணிமுடியில் சூட்டிக் கொண்டாள்.

காலக்கணிப்பில் எப்பொழுதும் வல்லவர்கள் தமிழர்கள்! காலம் தான் நல்லதாய் அவ்வப்பொழுது அமையாதது தமிழரின் போதாத காலம்!

கடற்கோளில் இழந்த தமிழ்க் கருவூலங்களை எல்லாம் மீட்டு எடுத்த ஒற்றைத் தனி அடையாளமாய் உலக மானுடத்திற்குப் பொதுமை அறத்தை மனித நேய மகா மந்திரத்தைத் தமிழ்மொழி வழியே தேனார் தீந்தமிழ்த் திருக்குறளாய் வழங்கிட்ட தமிழ் மாமுனிவர் மானுடஞானி திருவள்ளுவர், தமிழ் ஆண்டின் கால மையமாய் அமைந்திருப்பது சிறப்புகளில் எல்லாம் தனிப் பெருஞ்சிறப்பு!

மார்கழி மாதம் ஆன்மீக மலர்ச்சிக்காலம்!
இறைமை உணர்வின் எழுச்சிக்காலம்!

மார்கழி மாதம் சிவநெறியும், திருமால் நெறியும் பற்றிய தமிழர்கள் மார்கழி மாத வைகறைப்பொழுதின் பனிபடர்ந்த நேரங்களில் இறைமை உணர்வோடு இரண்டறக் கலந்திருக்கின்ற காலம்! தங்கள் வாழ்க்கைக்கு நல்ல தலைவன் வேண்டும் என்று கன்னியர்கள் பாவை நோன்பு நோற்கின்றனர்.

மார்கழி மாதப் பனிக்கால பாவை நோன்பு நிறைவு பெற்று தை மலர்ந்ததும், பெண்களின் திருமண வாழ்வு மலர்கின்றது! அதனால் தான் "தைப் பிறந்தால் வழி பிறக்கும்" என்ற பழமொழி பிறந்தது!

மண் மாதா முடித்து வைத்திருந்த செல்வம் எல்லாம், அறுவடை ஆகின்ற காலம். தைப் பிறக்கின்ற காலம் தான்! தைத் திங்களில் மகப்பேறு ஈன்ற தாயைப்போல, பூமித்தாய் உடம்பு எல்லாம் நெல்லாய் மகிழ்ந்து மலர்ந்து நிற்கின்றாள்!

மண், காற்று, நீர், கதிரொளி, மாடு, மனிதர்கள், உழைப்பு அனைத்தும் வியர்வையின் விளைச்சல் உச்சத்தைச் சந்திக்கின்ற மகிழ்ச்சிக் காலம்தான் தைத் திங்கள் மலர்கின்ற காலம்!

மார்கழித் திங்களின் கடைசி நாள்!
தைத் திங்கள் மலரும் முதல் நாள்!
போக்கித் திருநாள்,

ஆம்! போகவேண்டியதைப் போக்க வேண்டும். நீக்க வேண்டியதை நீக்க வேண்டும். ஒதுக்க வேண்டியதை ஒதுக்க வேண்டும். கழிக்க வேண்டியதை கழிக்க வேண்டும்.

இல்லத்தின் குப்பைகளைப் போக்கி விட்டோம்! பொசுக்கி விட்டோம்!
இதயத்துக் குப்பைகளைப் போக்கி விட்டோமா?

ஆன்மிக வாழ்வில், காதல் வாழ்வில் உழைக்கும் உழவர் பெருமக்களின் பொருளாதார வாழ்வில் மகத்தான எழுச்சியைச் சந்திக்கின்ற,

தை முதல் திருநாளே, தமிழ்ப்புத்தாண்டாய் மலர்வது சாலச் சிறப்பானது ஆகும். சீனர்களும், சப்பானியர்களும், கொரியர்களும், மஞ்சூரியர்களும் எனப் பல கோடி இனமக்கள் இளவேனில் காலத்தைத் தங்கள் புத்தாண்டாய்க் கொண்டாடுகின்றனர்.

மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் டாக்டர்.கலைஞர் இழந்த தமிழை இருந்தமிழாய் செம்மொழிச் சிம்மாசனத்தில் அமரச் செய்தும், கடந்த காலத்தில் கைநழுவிப்போன தமிழ் ஆண்டுப் பிறப்பை, நிகழ் காலத்தில் நிலை நிறுத்தி, இக்காலமும், எக்காலமும், தமிழின், தமிழரின் பொற்காலமாய் மாற்றிக் காட்டியுள்ளார்.

தைத் திங்களே வருக!
தமிழ்ப் புத்தாண்டாய் மலர்க!
தமிழே! வாழ்க!
தமிழாய் வாழ்க!

அனைவருக்கும் இனிய தைத் திங்களின் தமிழ்ப் புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 95. மருந்து

உடல் பிணியின்றி இருக்க உதவி செய்வது மருந்து. பிணி, பழவினையாலும் வரலாம். பழவினையால் வந்த பிணிக்கு – உடலுக்கு மருந்து; ஆன்மாவிற்கு நோன்பு. இம்மையில் பொருந்தாப் பழக்கங்களாலும் பிணி வரும். இப்பிணிக்கு உணவில் கட்டுப்பாட்டுடன் மருந்தும் தேவை. இயற்கையோடிசைந்து வாழ்தலே சிறந்த மருத்துவம் சார்ந்த வாழ்க்கை. மண். நீர், தீ, வளி, கதிரவன் ஆகியன இயற்கை தந்த எளிமையான மருந்துகள். இவற்றைத் தூய்மை கெடாமல் பாதுகாத்துப் பயன்படுத்த வேண்டும்.

*மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று.* (941)

வாதம், பித்தம், சேத்துமம் ஆகிய மூன்றும் மிகினும் குறையினும் நோய் செய்யும் என்பது நூலோர் முடிவு. "மிகினும் குறையினும்" – என்பதில் உழைப்பை செயலைச் சேர்த்துக் கூறல் நன்மரபாகா. அதுவும் உழைப்பு மிகுதியாவதை மறுப்பது போல் அமைவது பொருந்தாது.

*மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது*
*அற்றது போற்றி உணின்.* (942)

ஒருவன் முன் உண்ட உணவு செரித்த பின் மீண்டும் உண்ணும் பழக்கம் மேற்கொள்ளின் மருந்து வேண்டாம். உண்ட உணவு செரித்தாலே அடுத்த உணவை வாங்கச் சிறுகுடல் ஆயத்தமாக இருக்கும். அதோடு உண்ட உணவு செரித்துச் செங்குருதியானாலே செரிமானம் செய்யும் ஆற்றல் கிடைக்கும்.

*அற்றால் அளவறிந்து உண்க அஃதுஉடம்பு*
*பெற்றான் நெடிதுஉய்க்கும் ஆறு* (943)

தேவைக்கேற்ப அளவறிந்து உண்க. அங்ஙனம் அளவறிந்து உண்டால் உடம்போடு கூடி நெடுநாள் வாழ்தல் இயலும். உடம்பின்

இயக்கத்திற்கு உணவு. ஆதலால் உடம்பின் இயக்க நிலைமைக்கு ஏற்ப, ஆற்றல் (கலோரி) தரும் உணவு உண்ண வேண்டும். "அளவு" - என்பது உணவின் அளவல்ல. ஆற்றல் - கலோரியின் அளவைக் குறைத்தால் சிறுகுடல் ஒத்துழைக்காது, காற்றுத் தொல்லைகள் ஏற்படும்;

*அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறல்ல*
*துய்க்க துவரப் பசித்து.* (944)

முன் உண்ட உணவு செரித்தமை அறிந்து உண்ணும் பழக்கத்தை மேற்கொண்டு ஒழுகின் உடல் நலத்திற்கு நல்லது. மாறுபாடில்லா உணவை மிகவும் பசித்தபின் உண்க. நல்லபசி, உடல் நலத்துக்குரிய சான்றுகளில் முதன்மையானது.

*மாறுபாடு இல்லாத உண்டி மறுத்துண்ணின்*
*ஊறுபாடு இல்லை உயிர்க்கு.* (945)

உடல் நலத்திற்கு மாறுபாடில்லாத உணவை, சுவை காரணமாக மேலும் உண்ணும் வேட்கை எழுந்தாலும் அந்த வேட்கையை மறுத்து அளவோடு உண்ணில் உயிர்க்கு யாதொரு இடையூறும் இல்லை.

*இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்*
*கழிபேர் இரையான்கண் நோய்* (946)

உணவு அளவில் கூடும்பொழுது, நோய் உண்டாகும் இயல்பறிந்து உண்பான்கண் இன்பம் நிற்கும். பெருந்தீனி தின்போனிடம் நோய் தங்கியிருக்கும். பெருந்தீனி தின்போனிடம் நோய் நிலையாக இடம்பெறுதல் போல, உணவு அளவால் கூடும்பொழுது நோய் உண்டாகும். இயல்பறிந்து உண்பானிடம் இன்பம் நிலைபெறும்.

நோய்க்குக் காரணம் மிகுதியான உணவே.

*தீயளவு அன்றித் தெரியான் பெரிதுண்ணின்*
*நோயளவு இன்றிப் படும்.* (947)

மிகுதியான உணவின் தீமையைத் தெரியாது பேருண்டி கொள்வான் உடம்பில் பல நோய்கள் இடம்பெறும்.

*நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்*
*வாய்நாடி வாய்ப்பச் செயல்.* (948)

நோய் இன்னதெனத் தெரிந்து தெளிந்து கொண்டு அந்நோய்க்குரிய காரணத்தையும் கண்டறிந்து அதன்பின் அந்நோயின் காரணத்தை மாற்றும் வாயில் அறிந்து அப்படியே செய்க.

இந்தக் குறள் "மருந்து" அதிகாரத்தில் இடம்பெற்றிருந்தாலும் வாழ்க்கை முழுவதற்கும் பயன்படும் திருக்குறளாகும்.

*உற்றான் அளவும் பிணிஅளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்.* *(949)*

மருத்துவன், நோயுற்றானின் பருவத்தையும் அவனுடைய நோயின் அளவையும் மருத்துவத்திற்குரிய கால அளவையும் எண்ணிச் செய்தல் வேண்டும். "உற்றான் அளவு" - வயது; மருந்தினை ஏற்கும் உடல்திறன் அளவு; நோயுற்றானின் மருத்துவம் செய்து கொள்வதற்குரிய காலம்; பொருள் அளவுகள் என்றும் விரித்து எடுத்துக் கொள்க. "பிணியளவு" - நோய் பற்றிய காலம்; நோயின் முதிர்ச்சி ஆகியவற்றையும் எண்ணுக.

*உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வான்என்று*
*அப்பால்நாற் கூற்றே மருந்து.* *(950)*

நோயுற்றவனே நோய்க்குத் தீர்வாளன்; அங்ஙனம் இருக்க மருந்து வழிச்சொல்வானேன்? முறை தப்பினால் சாவே மருந்து. நோயுற்றவன் தன் பழக்கவழக்கங்களை மாற்றினாலே நோய்க்குத் தீர்வு வந்து விடும். மருந்து அவசியம் இல்லை.

*(தொடரும்)*



**பொங்கல் வாழ்த்து!**
**புதிய புத்தாண்டு வாழ்த்து!**

"மக்கள் சிந்தனை" அன்பர்கள் அனைவருக்கும் இனிய பொங்கல் வாழ்த்துக்களையும், புதிய புத்தாண்டு வாழ்த்துக்களையும் "மக்கள் சிந்தனை" அன்புடன் தெரிவித்துக்கொள்கிறது.

- ஆசிரியர்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# பெரியபுராணம் புலப்படுத்தும் வாழ்க்கைநெறி

(புலவர். **ச.மு. விமலானந்தம்**)

## 10. திருவடியே திருமுடி

கூற்றுவநாயனார்"திருக்களந்தை" என்ற பதியில் தோன்றினார். அவர் இறையடியாரிடத்து இடையறா அன்புடையவர்; வீரம்மிக்கவர்; அவர் யானைப்படை, குதிரைப்படை, தேர்ப்படை, காலாட்படை ஆகிய நால்வகைப் படைகளையும் பெற்றிருந்தார். அந்தப் படைகளைக் கொண்டு போர் பல செய்து மன்னர் பலரை வென்றார். ஆயினும் அவர் முடிசூடிக்கொள்ளவில்லை. பதவி பட்டங்களைப் பெறப் படாத பாடுபடுவோர் உள்ள இந்நாளில் வாழும் நமக்கு இது வியப்பபைத் தரும்.

ஒரு நாள் கூற்றுவநாயனார் முடிசூட்டுதற்குரிய மரபுடைய தில்லை வாழ் அந்தணர்களிடம் சென்று தமக்கு முடிசூட்டுமாறு வேண்டினார். ஆனால் அவர்கள் "நாங்கள் சோழ மன்னர்க்கன்றி மற்றவர்க்கு முடிசூட்டுவதில்லை" என்றனர். அதனால் அவர் மிகவும் வருந்தி இறைவரிடம் "எனக்கு உம் மலரடியை முடியாய்ச் சூட்டுக" என்று இறைஞ்சினார். நாயனார் நல்லடியாரானதால் அவர் கனவில் இறைவர் தோன்றித் தம் திருவடிகளை அவர் தலையில் அன்புடன் சூட்டினார். அழியும் அந்தணர், அழியும் முடியைச் சூட்டுவதைவிட ஆதியந்தமில்லா அம்பலவன் அழியாத் திருவடிகளை முடியாய்ச் சூட்டியது அளவிடற்கரிய பெருமையன்றோ? யாரே இப்பேறு பெறுவார்? (திருவடித்தீட்சை பெற்றவராகிறார்)

கூற்றுவ நாயனார் மிகவும் மகிழ்ச்சியுற்றார். இவ்வுலக உயிர்கள் இன்பமாய் வாழ சிவாலயங்களிலெல்லாம் சிறப்பான பூசைகள் செய்து, செங்கோலாட்சி செலுத்தி, அரனருள் பெற்று, அவனடி சேர்ந்தார்.

(தொடரும்)

# அருளாலய மும்பை

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி)

*இந்தியாவின் மேற்கெல்லை மும்பை யென்று,*
*இன்றில்லை அன்றுமுதல் அறிந்த ஒன்று;*
*முந்தையதன் பெயர்தானும் பம்பாய்! என்றே*
*முப்போதும் சொன்னவர்கள் இடைக்கா லத்தில்*
*சிந்தையினில் உதித்தசில கார ணத்தால்*
*சிறப்பான தொழில்வணிகப் பேரூர் தன்னைச்*
*சொந்தமுடன் மும்பையெனச் சொல்ல, ஞாலம்*
*சுகமாக மும்பையென்றே சொல்லு தம்மா!*

*இதுபோலக் கல்கத்தா கோல்கத் தாவாய்*
*இதமாக மாறியதால், இந்தப் பேர்கள்*
*மெதுமெதுவாய்ப் பழம்பெயரை மாற்றிய தாலே*
*மென்மையுடன் கோல்கத்தா, மும்பை என்றே*
*புதுப்பெயராய் வாய்விட்டுக் கூறு தற்குப்*
*புத்துணர்ச்சி பெறுகின்ற பலருள் சில்லோர்*
*மதராஸை, மௌண்ட்ரோட்டை மாற்றித் தானே*
*மகிழ்சென்னை, அண்ணாநற் சாலை யென்னார்!*

*சிலபோது மறந்தவர்கள் பழைய பேரைச்*
*சிந்தையின்றி மொழிந்தாலும் எடுத்துக் கூறும்*
*நலத்தாலே மாறிடுவர்! ஆனால் சில்லோர்*
*நயமாக உரைப்பதற்கும் மாட்டா ராகிப்*
*பலகாலம் பழகியதால் புதிய பேரைப்*
*பற்றோடு கூறாமல் பழமை தன்னில்*
*நலமிழந்து போவார்கள் பம்பா யைத்தான்*
*நனிமும்பை யாய்க்கூற நாணா ரன்றோ!*

வணிகத்தால் பெயர்பெற்ற மும்பை தானும்
    வளர்கின்ற பாரதத்தின் பங்குச் சந்தை
வர்த்தகத்தால் தடம்பதித்த நகரம், மேலும்
    வந்துபோகும் வெளிநாட்டார் தம்மால் நல்ல
வருமானம் பெருகுகின்ற நகரம், இன்னும்
    வசதிமிக்கோர் வனப்பாக வாழ்தற் கேற்ற
வண்ணமிகு மாடங்கள், கட்டி டங்கள்
    வரிசையினால் அழகூட்டும் நகரந் தானே!

வளமான பெருநகர மும்பை தன்னில்
    வண்ணஅலைக் கடற்கரையின் அழகி னோடே
வட்டமிடும் பன்னாட்டுக் கப்பல் தன்னில்
    வந்திறங்கும் வெளிநாட்டுப் பொருளி னோடு
வகைவகையாய் உள்நாட்டுச் சரக்கும் ஏறும்!
    வரம்பில்லாத் தொழிலாளர் கூட்டம் போல
வந்திறங்கி மேலேறிப் பறக்கும் வான
    வழியடைக்கும் ஆகாய விமானந் தானே!

தேனடையில் மொய்க்கின்ற தேனீப் போலத்
    தெருவெல்லாம் மொய்த்திடுவர் மக்கள்! எங்கும்
தேங்காமல் ஓடுகின்ற ஓடை நீர்போல்
    தெருவெல்லாம் ஓடுகின்ற வண்டி! மற்றும்
தேரோட்ட காட்சிபோல் நகரோ ரத்தில்
    தெறித்தோடும் தொடர்வண்டி ஓட்டத் தாலே
தேவலோகக் காட்சியதைத் தந்த ஊரைத்
    தெளிவாகத் திட்டமிட்டே நாசக் காரர்;

தாய்ஓட்ட லோடுஓப்ரா ஓட்டல் தன்னில்
    தங்கியநல் வெளிநாட்டு மக்கள் தம்மைச்
சாய்ப்பதற்காய்ச் சரமாரி சுட்ட தோடு
    சத்திரபதி சிவாஜிநகர் இடத்தி ருந்தோர்,
ஓய்வாகத் தொடர்வண்டிக் காகக் காத்து,
    ஒதுங்கியவர் எல்லாமும் ஒழிந்து போனார்!
தாய்ப்பாலைத் தருகின்ற மார்பைத் தானும்
    தயையின்றி அறுக்கின்ற தீயோ ராலே!

பிணந்தின்னும் கழுகுக்குப் பச்சா தாபப்
பரிவெல்லாம் தெரிந்திடுமோ? பகைமை கொண்டோர்
பணந்தன்னைப் பறிப்பதற்கோ? பதவிக் கென்றோ?
பயன்கருதிச் செய்தாரோ? என்றே ஏங்கிக்
கணநேரம் கண்ணயர்ந்தேன், கனவில் வந்தோர்,
"கருத்தின்றிப் பிறர்வாடச் செய்து பார்க்கும்
குணத்தாலே குறைமதியின் கூட்டத் தார்கள்
குலைநடுங்கச் செய்வதுதான் வழக்கம்" என்றார்.

"வீணாகப் பலஉயிரைக் குடிக்கும் அந்த
வீணர்களின் செய்கைக்கு முற்றுப் புள்ளி
கோணாமல் வைப்பதற்குக் குவல யத்தின்
கோடான கோடிமக்கள் கூட்டத் தார்க்குத்
தோணாமல் இருப்பதுதான் ஏனோ?" என்றேன்
தோய்வாக ஒன்றுரைத்தார்! "தோட்டா வாலே
மாணாத செயல்செய்வோர் மனமாற் றத்தால்
மாறாத வரையிதுதான் நடக்கும்" என்றார்.

"பிறிதின்நோய் தன்நோய்போல் போற்று வார்க்கே
பிழையின்றி இக்கருத்து புரியும்! வாளை
வெறியோடு விளையாட்டாய் வீசு வோர்க்கு
வெட்டியான சாத்தானுக் கோதும் வேத
அறிவுரைகள் பயனற்றுப் போதல் போல
அவரெல்லாம் மனமாற்றம் அடைவா ரோதான்"
மறித்தும்நான் கேட்டதற்கு "மக்கா வுக்குள்
மகம்மதுவை எதிர்த்தோரே மனமாற் றத்தால்;

மரியாதை கொடுத்தேதான் வரவேற் றிட்ட
மகத்தான செய்தியது நபிகள் நாயகர்
சரியான வரலாற்றில் இருப்ப தாலே
சரித்திரந்தான் மாறுமென்று" அடிகள் சொன்ன
பரிவான வார்த்தைகேட் டெழுந்த நானும்
"பழிகாரத் தீவிரந்தான் ஒழிக" என்றேன்!
பெரிதான அருளாலய வாயில் போன்ற
பெருவாயில் உள்ளமும்பை செயலி னாலே!

---

# உலகத் திருக்குறள்பேரவை ஆலோசனைக்கூட்டம்

## மதுரை

2009 "மே" திங்களில் நடைபெற உள்ள உலகத் திருக்குறள் பேரவையின் மூன்றாம் மாநாடு நடத்துதல் தொடர்பாக ஆலோசனைக் கூட்டம் மதுரை நியு காலேஜ் அவுஸ், திருவள்ளுவர் அரங்கில் திருக்குறள் செம்மல் ந.மணிமொழியன் தலைமையில், அறமனச் செம்மல் சீனு. சின்னப்பா அவர்களின் முன்னிலையில் 20.12.2008 அன்று காலை 10.30 மணிக்கு நிகழ்வுற்றது. இக்கூட்டத்தில் திருவாளர்கள் ந.மணிமொழியன், சீனு.சின்னப்பா, திருக்குறள் சண்முகனார், புலவர் தி.சு.மலையப்பன், கா. அரங்கசாமி, அ.கி. செல்வக்கணபதி, கா. கருப்பையா, சொ. சேதுபதி, பா. சுந்தர், மு.பழனியப்பன், மு. அன்பழகன் ஆகியோரும் மதுரை பாமணி, அசோக்ராஜ் மற்றும் பலரும் கலந்து கொண்டனர்.

ஒவ்வொரு மாவட்டத்தில் இருந்தும் உறுப்பினர்களின் பட்டியல் பெறப்பட்டு அப்பட்டியலை அச்சிட்டு வழங்குவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

மாவட்டக் கிளைகள் இல்லாத இடங்களிலும், நகரங்களிலும், உலக அளவிலும் கிளைகள் தொடங்க முடிவு செய்யப்பட்டது. ஒவ்வொரு மாவட்டத்திலும் குறைந்தது இரண்டு (திருக்குறள் மனனத்திறன் கொண்ட) மாணவர்களை, இரண்டு திருக்குறள் தொண்டர்களைப் பரிந்துரைப்பது என்றும் மாநாட்டில் அவர்களைப் பாராட்டுவது என்றும் திரு. சீனு.சின்னப்பா அளித்த தீர்மானம் முழுமனதாக ஏற்கப்பட்டு அடிகளாருக்கு அளிக்கப்படுகிறது. திருக்குறளுக்கு உரை எழுதிய சான்றோர்களை அழைத்து விழா மேடையில் பாராட்டுவது என்றும் முடிவு செய்யப்பட்டு அடிகளாரின் பார்வைக்கு வைக்கப்படுகிறது.

மாநாட்டை ஒட்டி பொதுமக்களுக்காக மாநில அளவில் கவிதை, கட்டுரைப் போட்டிகளை நடத்தி மூவர் வீதம் அறுவரைத் தேர்வு செய்து மாநாட்டில் பாராட்ட பரிந்துரை அடிகளாருக்கு அளிக்கப்பெறுகிறது. மாநாட்டு ஊர்வலத்தில் ஒவ்வொரு மாவட்டமும் பதாகைகளோடு கலந்து கொள்வது எனவும், ஏதேனும் தீர்மானங்கள் கொண்டுவர விரும்பினால் அதனை எழுத்து வடிவில் அடிகளாருக்கு அனுப்புவது எனவும் முடிவு செய்யப்பட்டது.

பொதுச் செயலர் திருக்குறள் சண்முகனார் வரவேற்புரையும் நன்றி உரையும் ஆற்றினார்.

# கை தொழுவோம்; நாடு காத்திடுவோம்!

**(மரு. பரமகுரு)**

வீர மரணம் அடைந்துவிட் டார்;தியாக
வேள்வியில் ஆகுதி யாகிவிட்டார்!
பாரதத் தின்மானம் காக்கப்போ ராடிய
பாதுகாப் புப்படை வீரரம்மா!

மும்பை அதிர்ந்தது; குண்டெரி யால்,பூமி
முழுதும் அதிர்ந்தது; பாரதத்தாய்
நெஞ்சம் அதிர்ந்தது; நீள்அர பிக்கடல்
நிறமும் சிவந்த ததிர்ந்ததுவே!

கார்கரே சலேஸ்கர் சந்தீ பெனப்பல
கண்ணின் மணிகளை நாமிழந்தோம்!
ஆருக்கு மே,துன்பம் செய்தறி யாப்பல
அப்பாவி மக்களும் தப்பவில்லை!

வன்முறை யாளரின் வஞ்சகப் பேயாட்டம்
மாவீர ரைப்பலி கொண்டதம்மா!
பன்முறை போற்றி,அத் தியாக தீபங்களின்
பாத மலர்கள் பரவிடுவோம்!

புண்ணிய பாரதம் காக்கப்போ ராடி,விண்
புகுந்தமா வீரரைப் போற்றிடுவோம்;
கண்ணீரை மாலையாய்ச் சூட்டிஅவ் வீரரைக்
கைதொழு வோம்! நாடு காத்திடுவோம்!

# கோவை மாவட்ட உலகத் திருக்குறள் பேரவை சார்பில் கோவையில் முப்பெரும் விழா

# 6.12.2008

(செய்தித் தொகுப்பு : பேராசிரியர். **இ.சிவ செந்தில்**)

**த**மிழக அரசு திருவள்ளுவர் விருதுபெற்ற தவத்திரு. பொன்னம்பல அடிகளார் அவர்களுக்குப் பாராட்டு விழா, இலக்கியச் செல்வர் தமிழ்த் தூதன் புலவர் ம. இளங்கீரன் சிகரம் சிரிக்கிறது - கவிதை நூல் - வெளியீட்டு விழா, பேரறிஞர் அண்ணா நூற்றாண்டு விழா ஆகிய முப்பெரும் விழா கொங்கு மண்டலமாம் கோவை மாநகரில் தேவாங்க மேல்நிலைப்பள்ளிச் சாலையில் அமைந்துள்ள கோவை சன்மார்க்க சங்க மண்டபத்தில் கடந்த திருவள்ளுவராண்டு 2039, கார்த்திகைத் திங்கள் (நளி) 21 ஆம் நாள் சனிக்கிழமை (காரி) 6.12.2008 ஆம் நாள் காலை 10.00 மணிக்கு கோவை மாவட்டம் உலகத் திருக்குறள் பேரவை சார்பில் நடைபெற்றது.

அருட்செல்வர். டாக்டர். நா. மகாலிங்கம் அவர்கள் தலைமை ஏற்றார். தமிழ்க் கல்லூரி முதல்வர் முனைவர் ம. மனோன்மணி, சிவநேயச் செல்வி, ஆ. மரகதம், திருமதி. கவிதா இராம்குமார் முனைவர். வசந்திமாலா கயிலைமணி பத்மா ஆறுமுகம் ஆகியோர் ஒளிவிளக்கு ஏற்றி வைக்க விழாத் தொடங்கியது.

அஞ்சலகத்துறை திரு. மோகன் அவர்கள் இறைவணக்கம் பாடினார்.

கோவை மாவட்டம் உலகத் திருக்குறள்பேரவைத் தலைவர் முனைவர். தவத்திரு. மருதாசல அடிகளார் அவர்கள், வரவேற்றுப் பேசினார். அருட்செல்வர்.டாக்டர்.நா. மகாலிங்கம் அவர்கள் தமது தலைமை உரையைத் தெள்ளிய நீரோடை போன்ற தமிழால் வழங்கினார்கள்.

## திருவுருவப் படத்திறப்பு

அய்யன் திருவள்ளுவர் படத்தை விஜயா பதிப்பகம் வேலாயுதம் அவர்கள் திறந்து வைத்திடவும்; பேரறிஞர் அண்ணா படத்தை நாடாளுமன்ற மேனாள் உறுப்பினரும், வழக்கறிஞருமான திரு.க.இரா.சுப்பையன் அவர்கள் திறந்து வைத்திடவும்; தவத்திரு குன்றக்குடி அடிகளார் படத்தை மனிதநேயத் தமிழ்ப் பேரவையின் தலைவர் முனைவர் இரா. கனகசபாபதி அவர்கள் திறந்து வைத்திடவும்; திருவுருவப்படத் திறப்புவிழா நிகழ்வு நடைபெற்றது.

தமிழ்நாடு அரசின் திருவள்ளுவர் விருதுபெற்ற தவத்திரு. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்களைப் பாராட்டி கயிலைக் குருமணி - முதுமுனைவர். பேரூராதீனம் சீர்வளர்சீர் சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் தெள்ளுதமிழில் அருளுரை வழங்கினார்.

சிரவை ஆதீனம் - தவத்திரு குமரகுருபர அடிகளார் அவர்கள் தம் இனிய பாராட்டுரையை நல்கினார்கள்.

அடுத்து கவிஞர் தமிழ்த்தூதன் ம. இளங்கீரன் அவர்களின் "சிகரம் சிரிக்கிறது" என்னும் கவிதை நூல் வெளியீட்டு விழா நடைபெற்றது.

பேரூர் ஆதீனம் தவத்திரு - சாந்தலிங்க இராமசாமி அடிகளார் - சக்தி குழுமத் தலைவர் - அருட்செல்வர் திரு.நா. மகாலிங்கம், சிரவை ஆதீனம் குமரகுருபர அடிகளார், பேரூர் இளையபட்டம் மருதாசல அடிகளார், நாடாளுமன்ற மேலவை உறுப்பினர்கள் ச.விடுதலை விரும்பி, வழக்கறிஞர் க.இரா. சுப்பையன், திருக்குறள் பேரவை பொருளாளர், திரு.பழ.தரும. ஆறுமுகம் ஆகியோர் முன்னிலையில் தவத்திரு. குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் புலவர் - கவிஞர் ம.இளங்கீரன் அவர்களின் "சிகரம் சிரிக்கிறது" கவிதை நூலை வெளியிட்டார். அதன் முதல் படியினை ஆன்மீகச் செல்வர் திரு.ஆர்.கிருஷ்ணசாமி, கலைவாணி கல்வி நிறுவனங்களின் தாளாளர் அவர்கள் பெற்றுக் கொண்டார். அவரைத் தொடர்ந்து தொழிற்சங்கத் தலைவர் திரு.நா. நஞ்சப்பன், குறிச்சி நகராட்சித் தலைவர்

திரு.நா.பிரபாகரன், மாநகராட்சி மேனாள் உறுப்பினர், திரு.கே.எம்.இராமதாசு, காந்தீயக் கவிஞர். அழகுதாசன், தமிழ்ச் சிற்பி, இளம்விழியன் மற்றும் பலர் நூலைப் பெற்றுக் கொண்டனர்.

காந்தீயச் செம்மல் - காந்தி கிராமியப் பல்கலைக் கழகத்தின் மேனாள் துணைவேந்தர் முனைவர். திரு.ந. மார்க்கண்டன் அவர்கள் தமது காந்தீயச் சிந்தனைகளோடு கூடிய பாராட்டுரையையும் பேரறிஞர் அண்ணாவின் புகழையும் கவிதை நூலின் சிறப்பினையும் வெகுவாகப் பாராட்டி உரையாற்றினார்.

தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தமது பாராட்டுரையில், தீவிரவாதமும் பயங்கரவாதமும் நம்மை மிரட்ட சாதி பேதங்களை நீக்கி மானுடத்தைப் பேசும் ஒரே நூலாகத் திருக்குறள் இருக்கிறதெனவும் கணினியுகத்தி லும் அது தனது தனித்தன்மையோடு மிளிர்வதையும் சுட்டிக்காட்டினார்.

தமிழ்த்தூதன் - புலவர் - கவிஞர்.ம.இளங்கீரன் அவர்களின் கவிதை நூலான சிகரம் சிரிக்கிறது நூல் வெளியீட்டினையொட்டி அவருக்குத் தமிழச் சிற்பி கவிஞர்.இளம்விழியன் சர்வோதயக் கவிஞர். அழகுதாசன் ஆகியோர் இசையோடு வாழ்த்துக் கவிதை பாடி கவிஞர்.ம.இளங்கீரன் அவர்கட்கு வழங்கினர். மேலும் புலவரின் துணைவியாருக்கும் புலவருக்கும் பொன்னாடை அணிவித்து தங்களது அன்பினைத் தெரிவித்தனர்.

கலைமாமணி - கவிஞர் மரபின் மைந்தன் முத்தையா அவர்கள் கவிஞரின் கவிதை நூலைத் திறனாய்வு செய்து பேசுகையில் கவிஞரின் கண்ணோட்டத்தை மிகமிக ஆழமாக ஆய்ந்து பேசினார்கள்.

பேரறிஞர் அண்ணா நூற்றாண்டுச் சிறப்புப் பேருரையை தில்லி நாடாளுமன்ற மேலவை மேனாள் உறுப்பினரும் சொல்லின் செல்வருமான திரு.ச. விடுதலைவிரும்பி அவர்கள் ஆற்றினார்கள். அவர்தம் உரையில் தமிழ்ப் பண்பாட்டை ஆய்வுப் பொருளாக ஏற்றுக்கொள்ள வேண்டுமெனவும் கலாச்சார அடிமைத் தனத்திலிருந்து தமிழை மீட்டுத் தந்தவர் பேரறிஞர் - சிந்தனைச் சிற்பி - அண்ணா எனவும் தமிழக முதல்வராக விளங்கிய அண்ணாவுக்குப் புகழாரம் சூட்டி உரையாற்றினார். இறுதியாக புலவர் இளங்கீரன் அவர்கள் ஏற்புரையை நிகழ்த்த, விழா இனிதே நிறைவெய்தியது.

# இல்லை திருவள்ளுவருக்கு ஈடு!

(புலவர். வீ.செ. கந்தசாமி)

எவ்வுயிருந் தன்னுயிர்போல் போற்றச் சொன்ன
இயேசுபிரான் வழிசென்றோர் கிறித்தவ ரானார்!
கவ்வுகின்ற ஆசையறு என்ற புத்தர்
காட்டியசீர் வழிநின்றோர் பவுத்த ரானார்!
எவ்வுலகத் திற்குமிறை ஒன்றே அல்லா
என்றநபி நெறிநின்றோர் இசுலா மானார்!
இவ்வுலகம் உய்ந்திடவே குறட்பே ராசான்
ஏற்றும்ஒளி நெறிநடந்தோர் மனித ரானார்!

நல்லாட்சி நெறிமுறைகள் தொகுத்த ளித்தார்;
நாடாள்வோர் தகுதிகளை வகுத்து வைத்தார்;
பொல்லாத கொடியோரை ஒறுக்கச் சொன்னார்;
போய்ப்பெறுக பெரியார்தம் உறவே என்றார்;
வல்லாண்மை ஆட்சிசெயும் கொடியோர்க் கென்றும்
வாள்,ஈட்டி துணையாகா; முறையே காக்கும்;
அல்லலுறும் மக்கள்விடு கண்ணீ ரன்றே
அறம்பிறழ்ந்தார் வாழ்வழிக்கும் படையாம் என்றார்!

இறக்கையின்றி விரிவானில் பறக்க லாகும்
எரியாலே சுடப்படினும் உய்வுண் டாகும்;
உறுப்பீன முடவனவன் கொம்புத் தேனை
உச்சிமலை மீதேறிச் சுவைக்க லாகும்;
திறமையிலான் அடலேற்றை அடக்க லாகும்;
தீயவழி சென்றோர்கள் திருந்த லாகும்;
அறனிழுக்கும் ஒழுக்கமிலான் உயர்வே கொள்ளான்
அறிவாசான் வள்ளுவனார் உரைத்த வாக்கே!

---

பெண்ணாலே நிகழ்ந்தபெரும் போரைப் பாடி
பெருங்கவிஞன் ஓமர்அதை "இலியத்" என்றார்!
மண்ணாலே விளைந்தபெரும் போரைப் பாடி
வியாசமுனி பாரதமாம் நூலை யாத்தார்!
மண்மீது அறம்வளர்த்த அயோத்தி மன்னன்
மாண்பதனைப் பாடுவதே இராம காதை!
எண்ணியெண்ணி வாழ்வாங்கு மனிதர் வாழ
எழுந்ததுதான் திருக்குறளே! இதற்கீ(டு) உண்டோ?

**குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப்பெருமான் திருக்கோயில்**
**தைப்பூசப் பெருந்திருவிழா**

| | | |
|---|---|---|
| 30.1.2009 - ( தை 17) வெள்ளி | - | கொடியேற்றம் - முதல் திருநாள் |
| 4.2.2009 - (தை 22) புதன் | - | 6 ஆம் திருநாள், தங்கரதம் |
| 6.2.2009 - (தை 24) வெள்ளி | - | 8 ஆம் திருநாள், வெள்ளிரதம் |
| 7.2.2009 - (தை 25) சனி | - | 9 ஆம் திருநாள், திருத்தேர் |
| 8.2.2009 - (தை 26) ஞாயிறு | - | 10 ஆம் திருநாள், (தீர்த்தம்) |

**அனைவரும் வருக! அறுமுகச் செவ்வேள் அருள்பெறுக!**

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித்தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

- ஆசிரியர்

# தலமரங்கள்

(தொகுத்தவர் : புலவர். **மரு. பரமகுரு**)

| மரங்கள் | திருத்தலங்கள் | |
|---|---|---|
| 1. கொன்றை | 1. அச்சிறுபாக்கம் 2. திருப்புத்தூர் 3. திருத்தினைநகர்4. திருப்பந்தனை நல்லூர் 5. திருமாணிகுழி | 5 |
| 2. மகிழமரம் | 1. திருவண்ணாமலை 2. திரு ஏற்றியூர் 3. திருநீடூர் | 8 |
| 3. புன்னை | 1. திருஅம்பர் 2. திருப்புகலூர் 3. திருப்புனவாசல் 4. வலிவலம் | 12 |
| 4. பாதிரி | 1. அவிநாசி 2. திருப்பாதிரிப்புலியூர் | 14 |
| 5. எலுமிச்சை | 1. திருஅன்னியூர் | 15 |
| 6. ஆத்தி | 1. திருஆப்பாடி 2. திருச் செங்கோட்டான்குடி | 17 |
| 7. வன்னி | 1. திருஆமாத்தூர் 2. கோட்டூர் 3. பட்டீச்சுரம் 4. திருப்பாசிலாச் சிரமம் 5. திருப்பாண்டிக் கொடுமுடி 6. திருப்பாம்புரம் 7. திருப்புறம்பயம் 8. போறு பெருந்துறை ௯. திருமறைக்காடு 10. திருமுதுகுன்றம் | 27 |
| 8. பலா | 1. திருஆலங்காடு 2. திருப்புவனம் 3.திருப்புகலூர் | 30 |
| 9. ஆலமரம் | 1. திருஆலம் பொழில் 2. திருக்கச்சூர் 3. திருப்பழுவூர் | 33 |
| 10. கடம்பமரம் | 1. திருஆலவாய் 2. திருக்கடம்பந்துறை | 35 |
| 11. படரரசு | 1. திருவாவடுதுறை | 36 |
| 12. வெள்ளை நாவல் | 1. திருவானைக்கா | 37 |
| 13. மருத மரம் | 1. திருவிடைமருதூர் | 38 |
| 14. வெள்ளெருக்கு | 1. திரு எருக்கத்தம்புலியூர் | 39 |
| 15. பூளைச்செடி | 1. திருவிரும்பூளை | 40 |
| 16. புளியமரம் | 1. திருஈங்கோய்மலை | 41 |
| 17. பனை | 1. திருவோத்தூர் 2. பனங்காட்டூர் 3. திருப்பனந்தாள் 4. திருமழபாடி | 45 |
| 18. ஆன்பனை, பெண்பனை | 1. புறவார் பனங்காட்டூர் | 46 |
| 19. மா | 1. திருக்கச்சி ஏகம்பம் 2. நாளகக்காரோணம் 3. திருமாந்துறை | 49 |

# சேக்கிழார் உணர்த்திய செந்தமிழ் நெறி

(புலவர். ம. இளங்கீரன்)

**முன்னுரை**

சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்குக" என்ற சிவநெறியாளர்களின் சீரிய முழக்கம் ஒருபால் ஓங்கி ஒலித்துக் கொண்டிருக்கிறது. "ஆரா அன்பின் திறத்தால் இறைவனை அடையலாம். அவன் பேரா அருளைப் பெறலாம்" என்ற அடிப்படைக் கோட்பாடுகள் சைவ சமயத்தாருக்கே சிறப்பாக உரியன.

அவ்வகையில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் வரலாறுகளைத் திருத்தொண்டர் புராணம் என்னும் பெயரால் தொண்டைமண்டலம் குன்றத்தூர் அருளிய "அருள்மொழித் தேவர்" என்னும் சேக்கிழார் இயற்றியுள்ளார்.

**காலம்**

புராணம் என்பது பழைய வரலாறு. "திருத்தொண்டர்களாகிய அறுபத்து மூவரும் கி.பி. 300க்கும் கி.865க்கும் இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள்" என்றும் "துங்கபத்திரை ஆறு முதல் குமரி முனை வரைப்பட்ட தென்னிந்தியர் ஆவர்" என்றும் கூறுவர். ஆதலால் சேக்கிழாரின் இலக்கியத்தில் கி.பி. நான்காம் நூற்றாண்டிற்குப் பின்னரும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன்னரும் வாழ்ந்த திருத்தொண்டர்களாகிய சான்றோர்களின் வரலாறு கூறப்பட்டிருப்பதால் "திருத்தொண்டர்புராணம்" என்றும் "பெரியபுராணம்" என்றும் வழங்கப்பட்டு வருகிறது.

சேக்கிழார் சோழன் அநபாயன் குலோத்துங்கன் அரசவையில் உத்தமச் சோழ பல்லவன் என்னும் பட்டத்துடன் அமைச்சராய் விளங்கினார். எனவேதான் வரலாற்றுத் தடயங்கள் பெறவும் செல்லும் வழித்தடங்கள், ஊர்கள், நீதி, ஆட்சி முறை, தொழில் மற்றும் சமூக

நிலைகள் ஆகியவற்றைத் தெளிவுறவும் அவரால் குறிப்பிட முடிந்தது.

"பெருங்காப்பியம்" என்னும் தகுதி படைத்த இந்நூல் இரண்டு காண்டங்களாக 4250 விருத்தப்பாக்களால் இயற்றப்பட்டது. இந்நூல் "தமிழ்ப் பண்பாட்டின் உறைவிடமாக, தமிழக வரலாறாக, வையத்துள் வாழ்வாங்கு வாழ விரும்பும் மனித குலத்திற்கு வழிகாட்டியாக விளங்குவது" என்பர்.

## அடி எடுத்துக்கொடுத்த சிறப்பு

இறைவனே சேக்கிழாருக்கு "உலகெலாம்" என அடி எடுத்துக் கொடுத்ததாகக் கூறுவர். எனவேதான் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரனார் தமது சேக்கிழார் பிள்ளைத் தமிழ் நூலில் தாலப் பருவம் எட்டாம் பாடலில் சேக்கிழாரைப் "பக்தி நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவன்" எனப் புகழ்கிறார். சேக்கிழார் தமது பெரிய புராணத்தை, "உலகெலாம்" எனத் தொடங்கி, "நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்" என்று முடித்திருப்பதும் இந்நூலின் சிறப்பாகும். மேலும் சோழன் அநபாய குலோத்துங்கன் II-இந்நூலை அரங்கேற்றும் காலத்துப் பட்டத்து யானை மீது சேக்கிழாரை அமர வைத்து நூலுடன் வலம் வரச் செய்த நிகழ்ச்சி இந்நூலுக்கும் தமிழுக்கும் தமிழறிஞர்களுக்கும் பொது வாழ்வில் அளிக்கப்பட்ட சிறப்பினை விளக்குகின்றது. அபயகுலசேகரன் என்னும் ஆதித்த சோழன் காலத்தில் நம்பியாண்டார் திருமுறைகளை வகைப்படுத்தி அடியார்கள் அருளிய திருமுறைகளுடன் பன்னிரண்டாம் திருமுறையாக இந்நூலைச் சேர்த்துச் செப்பேடும் செய்து பொன்னம்பலத்தில் வைத்தான் எனஅறிகிறோம்.

## தொண்டுநெறி

தமிழர், "மக்கள் தொண்டே மகேசன் தொண்டு" - என்னும் கொள்கை அடிப்படையில் கடவுளுக்கும் அடியார்களுக்கும் செய்யும் தொண்டே மிக மேலானது எனக் கருதினர். "வடநூலார் கர்மமார்க்கம்" எனக் கூறும் "தொண்டுநெறி" அன்புநெறியில் அடங்கும் எனப் பேராசிரியர் மொ.அ. துரையரங்கனார் "அன்பு நெறியே தமிழர் நெறி" என்னும் நூலில் கூறியுள்ளார்.

அடிமைத் திறம் அல்லது தொண்டு என்ற பண்பாட்டிற்கு ஓர் இலக்கணம் வைத்து அந்த இலக்கணப்படி வாழ்பவர் யாவராயினும் அவர்கள் அடியார்கள் அல்லது தொண்டர்கள் எனக் கூறப்படுவர்" என்பர் அறிஞர் அ.ச. ஞானசம்பந்தம் அவர்கள்.

இதனை,

"படமாடும் கோயில் பகவற் கொன்றீயின்
நடமாடும் கோயில் நம்பர்க் கங்காகா
நடமாடும் கோயில் நம்பர்க் கொன்றீயில்
படமாடும் கோயில் பகவற் கதாமே"

என்று கூறுகிறது திருமந்திரம்.

இறைவரோ தொண்டர்தம் உள்ளத் தொடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே

என ஔவையார் கூறுவதும் ஈண்டு கருதத்தக்கது. அந்நெறியில் பெரியபுராணம் பாடப்பட்டிருப்பது புதுமைக் கண்ணோட்டமாகும்.

**சமநிலைச் சமுதாயம்**

பெரியபுராணத்தில் உள்ள சிவனடியார்கள் பல்வேறுபட்ட தொழிலாற்றும் வாழ்க்கை நெறிமுறைகளைக் கொண்டவர்கள். அனைத்து அடியார்களையும் சமநிலையில் ஒன்றுபடுத்திப் போற்றியிருப்பது இப்புராணத்தின் காவியத் தலைவராகிய சுந்தரரின் திருத்தொண்டத் தொகையாகும். "தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன், திருநீல கண்டத்துக் குயவனார்க்கு அடியேன்" என மேற்குடி அந்தணர்களையும் அவர்தம் ஏவல் செய்யும் கீழ்க்குடியினராகக் கருதப்படும் அனைவரையும் சமநிலையில் வைத்துப் பாடியிருப்பது சேக்கிழாரின் மனப்பண்பினையும் காவிய நாயகனின் சமநிலை உள்ளக் கோட்பாட்டினையும் வெளிப்படுத்துவதாகும்.

சமநிலைப் பண்பினை,

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள்"

– (சாக்கிய நாயனார் புராணம் பா–6)

எனப் பரவலாகக் காட்டியுள்ளார் சேக்கிழார்.

## திருஞான சம்பந்தரின் தமிழ்ப் பற்று

கி.பி. ஏழாம் நூற்றாண்டில் சைவ சமய எழுச்சிக்கு உரியவர்கள் எனக் கருதப்படுபவர்கள் ஆளுடைப்பிள்ளை ஞானசம்பந்தரும், ஆளுடை அரசு அப்பர் பெருமானாகிய திருநாவுக்கரசரும் ஆவர். திருஞான்சம்பந்தர் போல் இறைவியிடம் ஞானப் பாலுண்டு பாடல் மொழிந்ததாக வேறு எம்மொழியிலும் காணவியலாது. நற்றமிழ் வளர்த்த ஞானசம்பந்தரால் செந்தமிழ்மொழி மறுமலர்ச்சி பெற்றது என இதன்வழி உணர்த்துகிறார். திருஞானசம்பந்தரையும் திருநாவுக்கரசரையும் இணைந்தது வரலாறு படைத்துள்ளதன் மூலம் மனித குலத்தில் இளையோர், முதியோர் என்ற வேற்றுமை இல்லை என்ற புறநாநூற்றின் கருத்தினைப் புலப்படுத்தியிருப்பதைக் காண முடிகிறது. "பெரியோரை வியத்தலும் இலமே; சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்பது புறநானூறு. சம்பந்தரின் பதிகங்களில் கடைக்காப்புச் செய்யுள்கள் பலவற்றில் தமிழையும் தன்பெயரோடு இணைத்து, "பூசுரன் தமிழ் ஞானசம்பந்தர்", "செந்தமிழ் வல்லார்" என்றெல்லாம் தமிழ் உணர்வோடு பாடியுள்ளதை அறியலாம். ஆனால் அவர்வழியில் வந்தவர்கள் திருக்கோயில்களில் தமிழைப் பாடத் தயங்குவது ஊழ்வினை அன்றோ?

## திருநாவுக்கரசரின் நன்னெறி

மன்னர் ஆட்சிக் காலத்திலேயே திருநாவுக்கரசர் "நாமார்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்" என மகேந்திர வர்மனுக்கு (கி.பி.603 - 630) உரைத்த எழுச்சிமிகு பாடல்கள் கொண்டது தேவாரம். அந்தப் பாநிலைக் கருத்துக்களை ஒட்டியே அவரது வரலாற்றைச் சேக்கிழார் சிறப்புறப் பாடியுள்ளார்.

> "அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோயராய்
> ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
> கங்கை வார் சடைக் கரத்தார்க்கு அன்பராகில்
> அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே"
>
> - திருநாவுக்கரசர் தேவாரம் 6:95:9

சேக்கிழார் கொல்லாமை, புலால் மறுத்தல், சைவ நெறி பின்பற்றும் சிவனடியார் யாவரும் சமம் என்ற சமநிலைக் கோட்பாட்டினை வலியுறுத்தி தமிழக மக்களுக்கு வழிகாட்டுவது ஈண்டு கருதற்பாலதாகும். உழவாரப் படை ஏந்தி உழைத்த உழைப்பிற்காக திருவீழிமிழலையில்

வாசியில்லாக் காசு பெற்ற வரலாறு உழைப்பின் உயர்வைக் காட்டுவதன்றோ?

**மகளிர் மாண்பு**

வடமொழி தழுவிய சமண சமயத்திலிருந்த தருமசேனரைச் சைவ சமயச் சான்றோராக, திருநாவுக்கரசர் என்று ஆக்கிய பெருமை இனமானச் செல்வி திலகவதியாரையே சேரும். கற்பினுக்கும், பொற்பினுக்கும் அணிகலம் பூண்டவர், பக்தியில் சிறந்து சிவநெறியில் தொண்டு நெறியைச் சேர்த்த பெருமைக்குரியவர் திலகவதியாராவார்.

இறைவராலேயே "அம்மையே" என மதிக்கப்பெற்ற மாதரசி புனிதவதி. காரைக்கால் அம்மையாராகி, கவினுறு நூல்கள் படைத்த வரலாறு அக்கால மகளிரின் மாண்பைப் புலப்படுத்துவதாகும். "மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை பங்கயச் செல்வி பாண்டிமாதேவி" இல்லை எனில் பாண்டிய நாட்டில் தமிழும் சைவமும் தழைத்திருக்குமா?

**திண்ணிய நெஞ்சம் :**

பாண்டியனின் வெப்பு நோய் தீர்த்து, அனல் வாதம், புனல் வாதம் நிகழச் செய்தது, பகைவர் வைத்த நெருப்பு பையவே சென்று பற்றச் செய்யது எனச் சம்பந்தர் நிகழத்திய வரலாற்று நிகழ்வுகள் செம்மொழித் தமிழின் தெய்வீக ஆற்றலை உலகுக்கு உணர்த்துவனவாகும்.

சுண்ணாம்பு நீற்றறையில் சுட நெருப்பைக் குளிர வைத்ததும், கல்லைத் தெப்பமாக்கியதும், யானையின் மனத்தை மாறச் செய்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் அப்பரின் செந்தமிழ் மந்திரச் சொற்களால் நிகழ்ந்தவையாகும்.

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்"

என்ற திருவள்ளுவர் வழியில் சேக்கிழார் செந்தமிழ் நெறியினைத் தம் இலக்கியத்தில் அழகுற வெளிப்படுத்தியுள்ளார்.

(தொடரும்)

# தமிழ் வழிபாடு

**(வி. நாகசுந்தரம்**, சென்னை)

**த**மிழகத்தில் உள்ள ஆலயங்களில் - தமிழர்களால் கட்டப்பட்ட ஆலயங்களில், தமிழர்கட்கே உரிமையான கோயில்களில், இறைவன் இறைவியர் திருவுருவங்கள் வைத்து வழிபடுதல், பூசை, ஊர்வலம், திருவிழா, கடவுள் மங்கலம் (குடமுழுக்கு) போன்ற பல்வேறு சமயம் சார்ந்த நடவடிக்கைகள், வழிபாட்டு முறைகள் போன்ற அனைத்தும் இன்றைய இந்து சமயத்திற்கு தமிழர் தம் கொடையே! இது பற்றி விரிவாக விளக்காது, "ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு" என்பது போல், உலகப் புகழ் பெற்ற தத்துவ ஞானி Dr. இராதாகிருட்டிணன் அவர்களது 'Religion and Society' என்ற நூலிலிருந்து ஒரு சிறு குறிப்பை மட்டும் தருகின்றோம்.

"ஆரியர்களின் சமயம், பண்பாடு, மொழி முதலியன அவர்கள் இங்கு வரும்பொழுது அங்கு வாழ்ந்து கொண்டிருந்த மக்களின் சமயம், பண்பாடு, மொழிகளில் மாறுபட்டிருந்தன. தமிழர் சிவவழிபாட்டினர். ஆரியர்கள் இயற்கைப் பொருள்களையும், வியப்பளிக்கும் இயற்கை நிகழ்ச்சிகளையும் தேவர்களாகக் கொண்டு வழிபடுவோராக இருந்தனர். அவர்கள் சிவனை வழிபடவில்லை. தமிழர்கள் கோயில் அமைத்து திருவுருவங்கள் வைத்துப் பூசைகளும், விழாக்களும் நடத்திக் கடவுளை வழிபட்டனர்"

தமிழகக் கோயில்களில் தமிழர்களே தங்களது இறைவன், இறைவியர்களை நேரடியாக வழிபட்டனர். இன்றைக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கூடத் தமிழ் வழிபாடே இருந்தது. இதோ திருஞானசம்பந்தப் பெருமானும், திருநாவுக்கரசு அடிகளும், மிக அழகாக - தமிழில் இறைவழிபாடு பற்றிப் பாடுவதைக் கேளுங்கள்!

1. "தடங்கொண்ட தொர் தாமரைப் பொன்முடி தன்மேல்
   குடங் கொண்டு அடியார் குளிர்நீர் சுமந்தாட்ட" 1-32-2

2. "கடியார் மலரும் புனல் தூவி நின்றேத்தும்
அடியார் தொழும் அன்பில் ஆலந்துறையாரே" 1-33-7

3. "செந்தமிழர் தெய்வமறை நாவர், செழுநற்கலை
தெரிந்த அவரோடு
அந்தமில் குணத்தவர்கள் அர்ச்சனைகள் செய்ய
அமர்கின்ற அரனூர்" 3-80-4

4. "ஆக்கையால் பயன் என் அரன் கோயில் வலம் வந்து
பூக்கையால் அட்டிப் போற்றி என்னாத இவ்
வாக்கையால் பயன் என்" - தமிழ்வேதம் 4

5. "போதொடு நீர் சுமந்து ஏத்திப்புகுவார்
அவர் பின் புகுவேன்" - தமிழ்வேதம் 6

இவ்வாறு தமிழர்களே நேரடியாகத் திருக்கோயில்களில் தமிழில் வழிபாடு நடத்திய முறை கி.பி. பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர் மெதுவாக வடமொழி வழிபாடாக மாற்றப்பட்டது. பிராமணர்கள் மட்டுமே வழிபாடு செய்யும் நிலையும் ஏற்பட்டது. இது யாரால், எப்பொழுது முதல், ஏன், எவ்வாறு மாற்றப்பட்டது என்ற வினாக்களை இப்பொழுது நாம் எழுப்பத் தேவையில்லை. நமது உடனடித் தேவையெல்லாம் தமிழகத் திருக்கோயில்களில் தமிழில் வழிபாடு செய்யும் உரிமையை இழந்த உரிமையை மீண்டும் அடைய வேண்டுமென்பதே! அதே நேரத்தில் வடமொழி வழிபாடு வேண்டாம் என்ற கூறவில்லை. கூறுவது எனது நோக்கமன்று! வடமொழி வழிபாட்டை விரும்புபவர்கள் தாராளமாக வடமொழியில் வழிபாடு நடத்திக் கொள்ளட்டும். தடை இல்லை! நமது கோரிக்கையெல்லாம், நமது தாய்மொழியில் - தமிழ்மொழியில் வழிபாடு செய்யும் உரிமை இயற்கையாகவே - நாம் வேண்டுகோள் விடுக்காது - நமக்கு வேண்டும் என்பதே!

## தமிழ் வழிபாடு ஏன் வேண்டும்?

தமிழ் வழிபாடு வேண்டுமென்பதற்கு மேலே குறிப்பிட்டுள்ள காரணங்களுடன் ஒரு சில முதன்மையான கருத்துக்களை ஈண்டு எடுத்து வைக்க வேண்டியது எனது கடமை என நினைக்கிறேன்.

1. தமிழில் வழிபாடு நடைபெறும் பொழுது கூறப்படும் மந்திரம் என்ன என்பது நமக்குத் தெளிவாகப் புரியும். வடமொழியில் செய்யப்படும் வழிபாடு நமக்குப் புரியாது என்பது மட்டுமல்ல. வழிபாடு நடத்தும் சிவாச்சாரியார்கட்கும் / பட்டாச்சாரியார்கட்கும் புரிந்திருக்குமா என்பது ஐயப்பாட்டிற்கு உரியதே! ஏனெனில் இம் மந்திரங்கள் மனப்பாடமாகக் கூறப்படுகின்றன. அவ்வளவே!

2. தமிழில் வழிபாடு செய்தால் மந்திரங்களை "நேரமில்லை" என்ற காரணத்தால் குறைக்க முடியாது. ஏனெனில் நாமும் இத்தமிழ் மந்திரங்களுடன் ஒன்றி விடுவோம்; கூடச் சேர்ந்து ஓதுவோம்! ஆனால் நமக்குப் புரியாத மொழி என்ற காரணத்தால், வடமொழி மந்திரங்களைக் கூட்டவோ அல்லது குறைக்கவோ முடியும்!

3. தமிழில் வழிபாடு செய்யும் பொழுது உமையம்மைக்குச் சொல்லும் மந்திரத்தைக் கொற்றவைக்கோ, மாரியம்மனுக்கோ சொல்ல முடியாது. அதேபோல் சிவபெருமானுக்குக் கூற வேண்டிய மந்திரத்தைத் திருமால், முருகன் போன்ற இறைவர்களுக்குக் கூற முடியாது. ஆனால் வடமொழி மந்திரத்தின் பொருள் நமக்குப் புரியாததால் ஒரு இறைவனுக்குக் கூற வேண்டிய மந்திரத்தை "இன்னொரு" இறைவனுக்குக் கூறலாம். நமக்கு மொழி புரியாத காரணத்தால் அவற்றைக் கேட்டுக்கொண்டு தான் இருப்போம்! இருக்கின்றோம் உண்மையில்! இவ்வாறு பல கோயில்களில் அர்ச்சகர்கள் மந்திரத்தை மாற்றி மாற்றிக் கூறுகிறார்கள் என்பதை முன்னாள் முதல்வர். திரு. எம்.ஜி.ஆர். அவர்கள் அமைத்த மகாராசன் குழு தனது அறிக்கையில் ஆகமவிதி மீறலாகப் பதிவு செய்திருக்கிறது!

4. அர்ச்சகர்கள் தமிழில் வழிபாடு நடத்தும்பொழுது, நாமும் அவருடன் ஒன்றி, இறைவனை அவருடன் சேர்ந்து வழிபடும் பேற்றையும் பெறுவோம். வடமொழி நமக்குப் புரியாத காரணத்தால் இச்சூழல் வடமொழி வழிபாட்டில் வரவே வராது.

5. தமிழில் வழிபாடு நடத்தினால் அர்ச்சகர் நம்மை ஏமாற்ற முடியாது. ஆனால் வடமொழி வழிபாட்டில் நமக்கு எதிராகவே மந்திரங்களைக் கூறமுடியும். அசைக்க முடியாத வரலாற்று நிகழ்வு! 1971 தேர்தலில்

மதிப்பிற்குரிய ம.பொ.சி. அவர்கள் மயிலை கபாலீஸ்வரருக்கு அர்ச்சனை செய்து விட்டு மயிலாப்பூர்த் தொகுதியில் தி.மு.க. சார்பில் வேட்புமனு தாக்கல் செய்தார். ஆனால் தேர்தலில் தோற்றுப்போனார். கபாலீஸ்வரர் கோயில் அர்ச்சகர் ம.பொ.சி. தோற்றுப்போக வெண்டும் என்று தானே அர்ச்சனை செய்தேன் என்று சொன்னாராம்! (நன்றி. இராணி இதழ் 15.12.2008) ம.பொ.சி. கொடுத்த பணத்தில் அவருக்கே தோற்றுப்போக அர்ச்சனை செய்யப்பட்டது. அர்ச்சகரது வேண்டுகோளை இறைவன் ஏற்றாரா இல்லையா என்பது முக்கியமல்ல. வடமொழியில் நடத்தப்பட்டதால், அர்ச்சகர் தனது விருப்பத்திற்கு அர்ச்சனை செய்தார்! இதே வேண்டுகோளை அவர் தமிழ்வழிபாட்டில் இறைவனுக்கு விடுத்திருக்க முடியுமா? இப்பொழுதாவது புரிகிறதா தமிழ் வழிபாடு ஏன் தேவை என்று!

6. "மந்திரம்" என்ற தமிழ்ச் சொல்லுக்கு சொல்பவர் என்ன சொல்கிறாரோ அதைச் செய்யும் ஆற்றல் உண்டு.

> "நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப" – தொல்காப்பியம்
> "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
> மறைமொழி காட்டி விடும்" – திருக்குறள்

ஆனால் "மந்திரம்" என்ற வடசொல்லிற்கு அதைச் சொல்பவருக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் என்பதே பொருள்!

7. தமிழ் மந்திரங்களைத் தவறுதலாகக் கூறினால் கூட, தீயபலன் எதுவும் ஏற்படாது. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதும் பொழுது ஒரு சில சொற்களைத் தவறுதலாக ஒலித்தால்கூட இறைவனுடன் ஐக்கியமாகும் "பேறு" கிட்டுமே தவிர, தீயபலன் அல்லது தண்டனை கிடையாது. ஆனால் வடமொழி மந்திரங்கள் தவறுதலாக ஒலிக்கப்பட்டால் அது கண்டிக்கத் தக்கது என்பது மட்டுமல்ல. அச்சொற்களுக்கு வேறு பொருள் கூறும் நிலையும் ஏற்படும்.

தமிழிற்கு எதிராக "ஆகமவிதிமீறல்" என்று கூக்குரல் இடுபவர்கள் மகாராசன் குழு அறிக்கை ஆகமவிதிமீறல்கள் பற்றிப் பட்டியல் இட்டுள்ளதைப் பார்ப்பார்களாக!

இதோ! ஒரே ஒரு சான்று மட்டும்!

காமிகாகம விதிப்படி அர்ச்சகர்கள் ஊதியம் பெறக்கூடாது. இலவசப்பணி தான் செய்ய வேண்டும்! தமிழகத் திருக்கோயில்களில் இவ்வாறு தான் நடக்கின்றதா?

மேலும் இந்த அறிக்கை பிராமணர்கள் மட்டுமே அர்ச்சகர்களாக இருக்க வேண்டுமென்றோ, வடமொழியில் தான் வழிபாடும், கடவுள் மங்கலமும் (குடமுழுக்கு) நடத்த வேண்டுமென்றோ கூறுவது தவறானது. அது தமிழர் வழிபாட்டு மரபுகளுக்கு எதிரானது என்று பல்வேறு சான்றுகளுடன் நிறுவியுள்ளது.

மேலே கூறப்பட்டுள்ள பல்வேறு சான்றுகள் மூலமாக தமிழகத் திருக்கோயில்களில் மீண்டும் தமிழ் வழிபாடு - இயற்கையாக, தனியாக வேண்டுகோள் விடுக்காமலேயே கொண்டுவரப்படவேண்டும். தமிழக அரசு, இந்து சமய அறநிலையத்துறை, திருமடங்கள் (சைவம், வைணவம்) சமயம் சம்பந்தப்பட்ட அனைவர்க்கும் அன்பு வேண்டுகோள் விடுக்கின்றேன். வடமொழி வழிபாட்டை விரும்புபவர்கள் தாராளமாக வடமொழியில் செய்து கொள்ளட்டும்!

தமிழகக் கோயில்களில் தமிழ்வழிபாட்டை எதிர்பார்க்கலாமா?

*நன்றி : செந்தமிழ்ச்செல்வி, நவம்பர் 200*

## பொங்கல் வாழ்த்து!

வாழிய பொங்கல்! வாழியவே!
வாழிய புதிய தமிழாண்டு!
தோழமைப் பண்பு நிறைந்திடுக!
தொழில்கலை இன்பம் சிறந்திடுக!
வாழிய உலக மனிதகுலம்
வன்முறை யின்றி மகிழ்வுடனே!
சூமுக நலமே! குறள்வாழ்வு
சுடரொளி வீசிப் பரவுகவே!

- மரு. பரமகுரு

# கற்றால் இனிக்கும் கற்கண்டு

(பாவலர். தாழை. **ந. இளவழகன்**)

கற்றால் இனிக்கும் கற்கண்டு - திருக்குறள்
கற்பவர்க் கெல்லாம் சிறப்புண்டு.
வற்றா அறிவுக் கனிச்சாறு - தென்மொழி
வழங்கிய வள்ளுவத் தேனாறு!

பற்றாய்க் கற்றால் பயன்நல்கும் - திருக்குறள்
பயின்றிடப் பயின்றிடப் வளம்நல்கும்
கற்றோர் போற்றும் அறநூலாம் - கொய்யாக்
கனியாய்ச் சுவைக்கத் திறன் நூலாம்!

முற்றும் தெளியக் குறள்நாடு - குறளை
மகிழ்வாய்க் கற்று நடை போடு!
சற்றும் தயக்கம் கொள்ளாதே - குறளை
சலிப்பாய் வெறுத்துத் தள்ளாதே!

---

## சிந்தனை வட்டம்

மார்கழி மாத மக்கள் சிந்தனை இதழைப் படித்தேன். அருமை. 6ஆம் பக்கத்தில் ஒரு வினாடிப் பொறுமை பத்து வருட சுகம். 10ஆம் பக்கத்தில் புல்லறிவாண்மையுடையோர் திருந்தார் என்னும் அருள் உரை அருமை. வேரோடு வீழ்த்துவோம் - கட்டுரையில் முதல் பாராவும், கடைசிப் பாராவும் நெஞ்சைத் தொட்டன.

18,19 ஆம் பக்கங்களில் புதுச்சேரி மாலதி தன் கணவரின் உறுப்புகளைத் தானம் செய்தது, பொழிச்சலூரைச் சேர்ந்த தாய் தற்கொலை மரணவாக்குமூலத்தில் மூவரின் கண்களைத் தானமாக எழுதியது இரா. குறிஞ்சிவேந்தனின் இந்தக் கட்டுரை கண்ணீரை வரவழைக்கிறது. மரு.பரமகுருவின் "இந்தியத்தாய் தலை நிமிர்ந்தாள்" கவிதை, மிக எளிய நடையில் மிக அருமை. 5ஆம் பக்கத்தில் "சூதாடுவோர் கழகம்" பற்றிய செய்தி உண்மையே ஆகும்.

- காசிஸ்ரீ. V.G. தெய்வேந்திரன்

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

## பரிமள விலாஸ்

# S.சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி

## &

## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**

அடிவாரம், பழநி - 624 601.

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

Phone: 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இயக்குநர்

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின்அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி பற்றவைத்தல் 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் மண்புழு தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

| | | |
|---|---|---|
| தகுதி | : | தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும். |
| பயிற்சி நேரம் | : | பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம். |
| குறிப்பு | : | ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும். |



திருப்பூர்த் தமிழ்ச்சங்கத்தின் "இலக்கிய விருது -2007"க்கான விருதிற்கு நமது மக்கள் சிந்தனை ஆசிரியர், ஆதீனப்புலவர் மரு.பரமகுரு அவர்கள் படைப்பாகிய "பறம்புமலை – திருக்கொடுங்குன்றம்" என்ற நூல் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

– சிறப்பாசிரியர்
(மக்கள் சிந்தனை)







## சமய வாழ்வு

விலை : ரூ. 40/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

## காற்றில் வந்த கருத்துமழை

விலை : 70/-
பக்கங்கள் : 176 பக்கங்கள்

ஆசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

**திருமாறன் பதிப்பகம்**
7/8 பீட்டர்ஸ் குடியிருப்பு
இராயப்பேட்டை
சென்னை – 600 014



MAKKAL CHINTHANAI - January 2009 Price Rs. 5-00
Date of Publication 20-01-2009
Register of News Paper for India No. 85913/81 Register No. KKD/04/2009-2011



பெறுநர்
திரு அருள்திரு
ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி - வழி
அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166